मुचुकुन्दस्ततो दृष्ट्वा पुरीं तां अमरावतीम् ।

तद्दर्शनजसन्तोषात्पुरीं विस्मृतवान्निजाम् ॥

*முசுகுந்தன் அப்போது அந்த அமராவதீ நகரத்தைப் பார்த்து, அதைக் கண்டதால் உண்டான சந்தோஷத்தால் தன் சொந்த ஊரை மறந்திருந்தான்.*

तस्य हस्तं सामालम्ब्य देवेन्द्रस्वेन पाणिना ।

प्रवेश्य स्वगृहं रम्यं दर्शयामास सर्वतः ॥

*தன் கையால் அவனுடைய கரத்தைப் பிடித்து தேவேந்திரன் தன் அழகான இல்லத்திற்குள் நுழைந்து எல்லாவற்றையும் காட்டினான்.*

ततो नन्दनसंज्ञं तु सर्वर्तुफलसंयुतम् ।

मन्दारैः पारिजातैश्च चन्दनैर्हरिचन्दनैः।।

*அதன் அனைத்து கனிவகைகளுடனும் மந்தாரங்களாலும் பாரிஜாத புஷ்பத்தாலும் ஹரிசந்தனம் சந்தனமும் உடைய நந்தனவனத்திற்கு*

अशोकैश्चम्पर्कस्तालैः हिन्तालैरर्जुनरपि ।

पाटलैमल्लिकाभिश्च मालतीभिश्च शोभितम् ॥

அசோகமும் சம்பகமும் தாழமும் கர்ஜூரமும் , மருத மரமும் பாடலமும் மல்லிகையாலும் மாலதீயாலும் அழகுற இருந்த

सर्वर्तुफलपुष्पाढ्यैरेवं बहुविधैर्द्रुमैः ।

दर्शयामास देवेन्द्रो राज्ञे नन्दनमुत्तमम् ॥

அனைத்து வகை அழகான பழங்களோடும்  புஷ்பங்களோடும் பல வகை மரங்களோடும் அமைந்த  நந்தவனத்தை அரசனுக்கு தேவேந்த்ரன் காட்டினான்.

नन्दनस्य तु मध्ये तु देवालयमधर्शयत् ।

मुचुकुन्दाय तन्मध्ये देवं सिम्हासने स्थितम् ॥

நந்தவனத்திற்கு நடுவில் தேவாலயத்தையும் அதன் நடுவில் ஸிம்ஹாஸனத்தில் அமர்ந்த இறைவனையும் முசுகுந்தனுக்குக் காட்டினான்.

नागाभरणसंयुक्तं  नागयज्ञोपवीतिनम् ।

नीलकण्ठमुमाकान्तं चन्द्रार्धकृतशेखरम् ॥

ஸர்ப்பத்தை  ஆபரணமாகக் கொண்டவரை , ஸர்ப்பத்தை முப்புரி நூலாக் கொண்டவரை,  நீலகண்டரை, உமையின் தலைவனை, பிறை சந்திரனைத் தலையில் அணிந்தவரை

तं दृष्ट्वा नन्दने देवं मुचुकुन्दो महामतिः ।।

पुलकाङ्कितसर्वाङ्गो जातः साकेतभूपतिः ।

நந்தவனத்தில் அந்த இறைவனைக் கண்டு முசுகுந்தன் என்ற அறிவுமிகு அயோத்தியின் அரசன் சரீரமெங்கும் புல்லரித்தவனாக இருந்தான்

देवं मह्यं ददस्वेति देवेन्द्र समयाचत ।

दृष्ट्वा देवस्य सौन्दर्यं पुनःपुनरयाचत ।।

இறைவனின் அழகைக் கண்டு இவ்விறைவனை எனக்குத் தருவாய் என்று தேவேந்திரனை மீண்டும் மீண்டும் வேண்டினான்.

दातुं मनसि नेच्छासीत् देवेन्द्रस्य तदानघ ।

अस्मिन् देवेन्द्र प्रीत्या मे देवोऽसौ दीयतां मम ॥

தேவேந்த்ரனுடைய மனத்தில் (அதை) கொடுப்பதற்கு விருப்பம் இருக்கவில்லை. இவரிடத்தில் உள்ள அன்பால் "இந்த இறைவன் எனக்கு கொடுக்கப்பட வேண்டும்"

प्रार्थयामास देवेन्द्रं मुचुकुन्दः पुनःपुनः ।

श्वोहं दास्यामि देवेशं विटङ्केशं नृपोत्तम ॥

என்று மீண்டும் மீண்டும் முசுகுந்தன் தேவேந்திரனைப் ப்ரார்த்தித்தான். "ஓ சிறந்த அரசனே! இந்த விடங்கேஶரை இறைவனை நாளை தருவேன்."

उदीर्य तेन सार्धं सः प्रविवेश गृहं निजम् ।

उपाचाराच्च राजेन्द्रं  वासोभूषणमौक्तिकैः ॥

என்று சொல்லிவிட்டு அவனுடன் தன் இல்லத்திற்குள் நுழைந்தான். உடைகள் அணிகலன்களால் அரசனை  உபசரித்தான்.

सस्मार विश्वकर्माणं शचीभर्ता तदनन्तरम् ।

स्मरणानन्तरं सोऽपि समयातस्तदन्तिकम् ॥

அதன் பிறகு ஶசீயின் கணவனான இந்த்ரன் விஶ்வகர்மாவை நினைத்தான். நினைத்த மாத்திரத்தில் அவரும் அங்கே வந்து சேர்ந்தார்

इन्द्रस्तमागतं वीक्ष्य रहसीदमभाषत ।

एतद्विटङ्कसदृशं क्रियतां विग्रहान्तरम् ॥

அவர் வந்ததைக் கண்ட இந்த்ரன் ரகசியமாக "இந்த விடங்கரைப் போன்றே இன்னும் சில விக்ரஹங்களைச் செய்யுங்கள்" (என்று அவரிடம்) கூறினான்.

त्वयेत्याज्ञापितस्त्वष्टा चकार प्रतिमान्तरम् ।

इन्द्रस्तां प्रतिमां तत्र स्थापयामास  चालये ॥

இவ்வாறு  ஆணையிடப்பட்ட த்வஷ்டா  வேறு உருவங்களைச் செய்தார். இந்த்ரன் அந்த விக்ரஹங்களை அங்கே பிரதிஷ்டை செய்தான்.

अन्यत्र स्थापयामास पूर्वां तु प्रतिमां तदा ।

ततो नृपं समाहूय निर्जरेन्द्रोऽभ्यभाषत ॥

அதன் பிறகு முன்பிருந்த விக்ரஹத்தை வேறிடத்தில் ஸ்தாபித்தான். அதன் பின் அரசனை (முசுகுந்தனை) அழைத்து இந்த்ரன் பேசலானான்.

आलयं तु प्रविश्य त्वं विटङ्केशं प्रगह्य च ।

अयोध्यां प्रति निर्याहि मा विलम्बोऽस्तु भूपते ॥

"ஓ அரசனே! ஆலயத்தில் நுழைந்து நீ விடங்கேசரை எடுத்துக் கொண்டு, தாமதமின்றி நீ அயோத்யையை நோக்கிச் செல்வாய்."

इत्युक्तो नृपतिः शीघ्रं प्रतिमान्तिकमभ्यगात् ।

पूर्ववत्पुलको नाऽस्य समभूतस्य दर्शनात् ॥

என்றான். அரசன் விரைவில் விக்ரஹம் இருக்குமிடத்திற்கு வந்தான். அவற்றைப் பார்த்ததும் முன்பு போல் அவனுக்கு புளகாங்கிதம் ஏற்படவில்லை.

आगत्य देवराजस्य समीपं नृपतिर्जगौ ।

नैषा तु पूर्वा प्रतिमा सैव चानीयतां मम ।।

தேவேந்திரனிடம் வந்து அரசன் சொன்னான், "இது முன்பிருந்த விக்ரஹம் அல்ல. அதையே மீண்டும் கொண்டு வருவாய்"

अथान्यानपि पञ्चैवं कारयित्वा शचीपतिः ।

क्रमेण दर्शयामास एकैकं नृपतेस्तदा ॥

இவ்வாறே மற்ற ஐந்து உருவங்களைச் செய்து ஶசீயின் தலைவனான இந்த்ரன் வரிசையாக அரசனுக்கு காட்டினான்.

न स्वीचकार नृपतिस्तानि पञ्च द्विजोत्तमाः ।

नूतनाः प्रतिमाः सर्वास्ततो देवपतिस्स्वयम् ॥

ஒ ப்ராஹ்மணோத்தமர்களே! அந்த புதிய விக்ரஹங்கள் ஐந்தையும் அரசன் ஏற்கவில்லை. அதன் பிறகு எல்லாவற்றையும் தேவேந்த்ரன் தானே

निधायान्यत्र पूर्वं तु प्रतिमां पूर्ववच्छुभाम् ।

आलये स्थापयित्वैनां पश्चाद्राजानमाह्वत् ॥

வைத்துக் கொண்டு வேறிடத்தில் ஆலயத்தில் முன்பு போன்ற அழகிய விக்ரஹத்தை ப்ரதிஷ்டை செய்து பிறகு அரசனை அழைத்தான்.

पश्य राजन्विटङ्केशं अत्यन्ताद्भुतविग्रहम् ।

इत्युक्तो मुचुकुन्दस्तु विटङ्केशं ददर्श सः ॥

அரசனே! மிகவும் அற்புதமான விடங்கேஶ விக்ரஹத்தைப் பார்! என்று சொன்னான். முசுகுந்தன் விடங்கேஶரைப் பார்த்தான்.

अयमेव हि देवेन्द्र देवो दृष्टो मया पुरा ।

अपि सन्दर्शनान्मेऽद्य पुलकनि भवन्ति हि ॥

*ஓ தேவேந்த்ர! இவரே தான் என்னால் முன்பு காணப்பட்டவர். ஏனெனில் இன்று இவரைக் கண்டதும் புளகாங்கிதம் உண்டாகிறது.*

एनं ददस्व भद्र ते विटङ्केशं शचीपते ।

एवमुक्तो बलारातिः नृपेण प्रीतिमानसः ॥

*ஶசீயின் தலைவனே! பெருமைவாயந்தவரே! இந்த விடங்கேஶரை எனக்கு கொடுப்பீர் என்றான். அரசனால் மனமகிழ்ந்த இந்த்ரன்,*

ददौ सर्वविटङ्कानि तस्मै राज्ञे दिवस्पतिः ।

राजन्सर्वविटङ्कानि स्थापय त्वं हि भूतले ॥

*எல்லா விடங்கர்களையும் அவ்வரசனிடம் கொடுத்தான். "அரசனே! எல்லா விடங்கர்களையும் பூமியில் ப்ரதிஷ்டை செய்வாய்"*

इत्युक्तो देवराजेन अनुज्ञातश्च भूपतिः ।

तानि सर्वविटङ्कानि रथमारोप्य हर्षितः ॥

*என்றான். இவ்வாறு தேவர்கள் தலைவனால் ஆணையிடப்பட்ட அவ்வரசன் அந்த எல்லா விடங்கர்களையும் பூரிப்புடன் ரதத்தில் ஏற்றிக் கொண்டு*

आशीर्भिः देववृन्दैस्तु तोषितः स्वपुरीं ययौ ।

सेनापति वृतो राजा वन्दिभिश्चापि संस्तुतः ॥

தேவர் கூட்டத்தால் அளிக்கப் பட்ட ஆசிகளுடன் மகிழ்ந்தவனாக சேனாதிபதியும் கட்டியக்காரர்களும் சூழ தன் நகரத்துக்குச் சென்றான்.

अयोध्यां प्राप्य राजेन्द्रः कश्चित्कालमुवास सः ।

गते कतिपये काले मुचुकुन्दोऽतिधार्मिकः ।।

அயோத்யைக்குச் சென்று அந்த மிகுந்த தார்மிகனான முசுகுந்தன் என்ற அரசன் சிறிது காலம் வாழ்ந்தான். இவ்வாறு சிறிது காலம் செல்கையில்

विटङ्कस्थापनार्थाय पुण्यस्थमलदर्शत।

पुराणैस्स विनिश्चित्य पुण्यं वै कमलालयम् ॥

விடங்கரை ஸ்தாபிப்பதற்காக புண்ய ஸ்தலங்களைக் கண்டான். புராணங்களின் மூலம் புண்ய க்ஷேத்ரமான கமலாலயம் என்று தீர்மானித்துக் கொண்டு

तत्र संस्थापयामास विटङ्कं' प्रथमं नृपः ।

वेदारण्यस्य माहात्म्यं परिज्ञाय नृपोत्तमः ॥

அங்கே முதல் விடங்கரை அவ்வரசன் ஸ்தாபித்தான். வேதாரண்யத்தின் பெருமையை அறிந்துக் கொண்டு அந்த உத்தமமான அரசன்

द्वितीयं तु वविटङ्केशं स्थापयामास तत्र सः ।

तृतीयं स्थायामास कायारोहणसंज्ञिके ॥

*இரண்டாவது விடங்கேஶரை அங்கே நிர்மாணம் செய்தான். மூன்றாவதை காயாரோஹணம் (நாகப்பட்டிணம்) என்ற பெயருள்ள இடத்தில் ஸ்தாபித்தான்.*

श्रीसुन्दरनदीस्थाने चतुर्थमपि वै द्विजाः ।

विटङ्कं स्थापयामास लोकानां ऋद्धिहेतवे ॥

*ஓ ப்ராஹ்மணர்களே! நான்காவது விடங்கரையும் உலக நன்மைக்காக அழகிய நதியின்  கரையில் ஸ்தாபித்தான்.*

अन्यान्यपि विटङ्कानि पुण्यस्थानेषु भूपतिः ।

अन्येषु स्थापयित्वा स्वं कृतकृत्यममन्यत ॥

*அரச மற்ற விடங்கர்களைப் பிற  புண்ய க்ஷேத்ரங்களில் ஸ்தாபித்து தன் கடமையைச் செய்தவன் ஆனான்.*

एवं संस्थापिता राज्ञा विटङ्केशास्तपोधनाः ।

सप्तस्वपि विटङ्केषु स्थितेषु स नृपोत्तमः ॥

*ஓ தபஸ்விகளே! இவ்வாறு அரசனால் நிர்மாணம் செய்யப்பட்ட விடங்கேஶர்கள் ஏழு ஸ்தாபிக்கப்பட்ட விடங்கர்களுள் அந்த அரசன்*

वेदारण्यविटङ्केशं भक्त्या वै सेवते मुहुः ।

एतं खलु विटङ्केशं देवेन्द्रोपि दिने दिने ॥

*வேதாரண்ய விடங்கேஶரை பக்தியுடன் பல முறை வழிபட்டான். தேவேந்த்ரனும் இவரை தினந்தோறும் வழிபட்டான்.*

वेदारण्यस्य माहात्म्याद्भक्तियुक्तो निषेक्के ।

विटङ्कप्रतिमां चापि कमलालयवासिनीम् ॥

*வேதாரண்யத்தின் மாஹாத்ம்யத்தால் பக்தியுடன் வழிபட்டால் கமலாலயத்தில் உள்ள விடங்க மூர்த்தியைக் கூட*

अनादृत्यैव गिरिशो वेदारण्यस्य वैभवात् ।

मनसा प्रतिमामेनां बहुधा बहुमन्यते ॥

*மதிக்காமல் வேதாரண்யத்தின் மகிமையால் ஶிவன் மனத்தால் இந்த விக்ரஹத்தை மிகவும் விரும்புகிறார்.*

तस्मादेनं विटङ्केशं ये तु पश्यन्ति मानवाः ।

ते विटङ्केशसायुज्यं प्राप्नुवन्ति न संशयः ॥

*அதனால் இந்த விடங்கேஶரை எந்த மனிதர்கள் பார்க்கிறார்களோ, அவர்கள் விடங்கேஶருடன் ஸாயுஜ்ய நிலையை அடைவார்கள் என்பதில் ஸந்தேஹம் இல்லை.*

तस्मात्सर्वप्रयत्नेन गन्तव्यं वेदकाननम् ।

अन्यथा हि मनुष्याणां जन्म नूनं वृथाभवेत् ॥

அதனால் எப்பாடு பட்டாவது வேதாரண்யத்திற்குச் செல்ல வேண்டும். இல்லையென்றால் மானுட ஜன்மா நிச்சயமாக வீணாகிப் போய் விடும்.

बहुनात्र किमुक्तेन वेदारण्यस्य वैभवात् ।

ज्ञानादपि कृतं नूनं महापातककर्दमम् ॥

வேதாரண்யத்தின் பெருமையை எவ்வளவென்று சொல்வது? அதைப் பற்றி அறிந்தால் கூட பெரும் பாவச்சேறும் நிச்சயமாக

नश्यत्येव वदाम्यद्य सत्यं सत्यं तपोधनः ।

तदेवमेतत्कथितं विटङ्कागमकारणम् ॥

அழிந்துவிடும் என்று இன்று சொல்வேன். ஓ தபஸ்விகளே! இது உண்மை உண்மை! அதனால் இந்த விடங்கர் இங்கே வந்த காரணம் இவ்வாறு சொல்லப்பட்டது.

भोः भोः तपोधनाः किं वा भूयोपि श्रोतुमिच्छथ ।

ஓ தபஸ்விகளே! இதை பலமுறை கேட்க விரும்புகிறீர்கள் இல்லையா

॥ इति ब्रह्मकैवर्ते बेदारण्यमाहात्म्ये षष्ठोऽध्यायः ॥

*ப்ரஹ்மகைவர்தத்தில் வேதாரண்ய மாஹாத்ம்யத்தில் ஆறாம் அத்யாயம்*

## 8 श्रीशैवपुराणे सनत्कुमारसंहिताय नागपट्टणमाहात्म्ये

**सनत्कुमारः** (*ஸனத்குமாரர் சொன்னார்*)

नन्दिकेश महाभाग सर्वलोकहिते रत ।

शेषस्य सर्पराजस्य सोमास्कन्द-पदाम्बुजे ॥

सायुज्यमिति चैवोक्तं तस्योद्भवमशेषतः ।

वक्तुमर्हसि देवेश द्वितीयः परमेश्वर: ॥

एवमुक्तो मुनीन्द्रेण ध्यात्वा देवं महेश्वरम् ।

उक्तवान्सकलं तस्मै देव्यै देवेन भाषितम् ॥

*ஓ நந்திகேசரே! அனைத்துலகத்திற்கும் நன்மை செய்வதில் முனைப்பாக இருப்பவரே! ஆதிஶேஷனுடைய ஸர்ப்பங்களின் தலைவருடைய ஸோமாஸ்கந்த பாதத்தில் ஸாயுஜ்யம் என்று சொல்லப்பட்டது. அந்த ஸோமாஸ்கந்தருடைய தோற்றமும் முழுமையாக ஒன்றும் விடாமல் சொல்வீர். இரண்டாவதாக பரமேஸ்வரர், இவ்வாறு முனிவர்களால் த்யானிக்கப்பட்ட இறைவனை மஹேஶ்வரனை, அவருக்கும் தேவிக்கும் தேவர்களால் கூறப்பட்டது என்றார்..*

**नन्दिकेश्वरः (*நந்திகேஸ்வரர் சொன்னார்*)**

आदिसृष्टौ पुरा विष्णुः पुत्रार्थे तप आचरत् ।

विश्वकर्माणमाहूय सोमास्कन्दं महेश्वरम् ॥

निर्माय पूजयित्वा तु पुत्रं लब्ध्वा तु मन्मथम् ।

देवेन्द्रस्य ददौ देवं सोमास्कन्दं महेश्वरम् ॥

*முதல் ஸ்ருஷ்டியில் விஷ்ணு புத்ரனை வேண்டி தவமிருந்தார். விஶ்வகர்மாவை அழைத்து சோமாஸ்கந்தரை மஹேஶ்வரரை நிர்மாணம் செய்து பூஜித்து மன்மதன் என்ற புத்ரனை அடைந்து, பிறகு அந்த ஸோமாஸ்கந்த மஹேஶ்வர மூர்த்தியை தேவேந்த்ரனுடையதாகக் கொடுத்தார்.*

सोऽपि संपूज्य देवेशं चिरकालं मुनीश्वराः ।

दानवानां वधार्थाय चानीताय नृपाय च ॥

मुचुकुन्दाय तेनैव दत्तं देवं महेश्वरम् ।

सोपि हृष्टमनाः भूत्वा प्रापयामास वै मुने ॥

*ஒ முனிவர்களின் தலைவர்களே! அவரும் (இந்த்ரனும்) இறைவனை பல காலம் நன்கு பூஜித்து அஸுரர்களைக் கொல்வதற்காக அழைத்து வரப்பட்ட அரசன் முசுகுந்தனுக்கு அவரால் அந்த மஹேஶ்வரர் கொடுக்கப்பட்டார். ஒ முனிவரே! அவரும் மிக்க மனப்பூரிப்புடன் அதை அடைந்தார்*

कमलालये  क्षेत्रे क्षेत्राणामुत्तमोत्तमे ॥

*சிறந்த க்ஷேத்ரங்களுள் சிறந்த க்ஷேத்ரமாம் கமலாலயத்தில்*

**॥ इति श्रीशैवपुराणे सनत्कुमारसंहितायां नागपट्टणमाहात्म्ये ।**

*இவ்வாறு ஸ்ரீஶிவபுராணத்தில் ஸனத்குமார ஸம்ஹிதையில் நாகப்பட்டண மாஹாத்ம்யத்தில்*

**9.कालागरुवनमाहात्म्ये** *(காளாகருவன மாஹாத்ம்யத்தில்)* [1]

**शौनकः उवाच:**

*ஶௌனகர் சொன்னார்:*

**श्रीमदादिविटङ्कश्च एतत्क्षेत्रमुपागतः ।**

**इत्युक्तं च त्वया पूर्वं कारणं तत्र किं वद ॥**

**विटङ्क इति किं नाम देवता तत्र किं वद ॥**

*ஸ்ரீமத் ஆதிவிடங்கரானவர் இந்த க்ஷேத்ரத்துக்கு வந்தார் என்று உங்களால் சொல்லப்பட்டது. அதன் காரணம் என்ன என்று சொல்வீர். அங்கே விடங்கர் என்பது எந்த பெயருடைய இறைவன்? என்று சொல்வீர்.*

**सूत उवाच:**

*ஸூதர் சொன்னார்:*

[1] *காளாகருவனம் - திருக்காறாயில்*

मुचुकुन्दस्य चरितं श्रवणादघनाशनम् ।

वक्ष्येऽहं सङ्ग्रहेणैव सावधानेन तच्छ्रुणु ॥

முசுகுந்தனுடைய சரிதத்தைக் கேட்டால் பாபங்கள் அழியும். அதைச் சுருக்கமாகச் சொல்கிறேன் கவனத்துடன் கேட்பீர்.

मुचुकुन्द इति ख्यातः राजास्ति स महाबलः ।

सर्वलोकेषु विख्यातः गुणस्यातिप्रकाशवान् ॥

முசுகுந்தன் என்ற பெயருடைய பலம் வாய்ந்த அரசன் உள்ளான். அவன் அனைத்துலகிலும் பெயர் பெற்றவன், நற்குணங்களுடைய பொலிவு மிக்க உடையவன்.

देवानामसुराणां च भूपानां च तथैव च ।

जेता मन्त्रविदां श्रेष्ठो मन्त्रज्ञो ब्राह्मणप्रियः ॥

தேவர்களை அசுரர்களை அரசர்களையும் மனிதர்களையும் வென்றவன் மந்த்ரங்களை அறிந்தவர்களில் சிறந்தவனும் ப்ராஹ்மணர்களுக்கு ப்ரியமானவனும்

शिवभक्तो विशेषेण सर्वदा शिवपूजकः ।

अग्निहोत्रपरो नित्यं नित्यं चातिथिपूजकः ॥

விஶேஷமான ஶிவபக்தன் எப்போதும் ஶிவனை பூஜிப்பவன். தினமும்

*அக்னிஹோத்ரத்தில் ஆழ்ந்தவன் தினமும் அதிதிகளை பூஜிப்பவன்*

**एवंविधगुणो राजा शशास पृथिवीमिमाम् ।**

**तस्मिन्काले च  देवानामसुराणां द्विजोत्तमः ॥**

**युद्धं तदभवद्ब्रह्मन्केशाकेशि मिथो मिथः ।**

**इन्द्रस्तदानीं नृपतिं देवेन्द्रो देवनायकः ॥**

**आनयामास सूतेन देवानां च सहायिनम् ।**

**आहूतो देवराजेन मुचुकुन्दो महाबलः ॥**

*இப்படிப்பட்ட குணங்களை உடைய அரசன் இந்த பூமியை ஆண்டான். ஒ ப்ராஹ்மணோத்தமரே!  அச்சமயத்தில் தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் தலைக்குத் தலையும் ஒருவருக்கொருவரும் யுத்தம் (நடந்தது). தேவேந்திரனும் தேவர் தலைவனும் ஆன இந்த்ரன் அப்போது அரசனை ஸாரதியுடன் தேவர்களின் உதவிக்காக அழைத்து வந்தான். தேவர்க்கரசனால் அழைக்கப்பட்ட மிகுந்த பலம் பொருந்திய முசுகுந்தன்*

**कामगं रथमारुह्य देवलोकमवाप्तवान् ।**

**तदा सम्मानितो राजा देवेन्द्रेण जितश्रमः ॥**

*அவன் விருப்பப்படி செல்லக்கூடிய ரதம் ஏறி தேவலோகத்தை அடைந்தான் அப்போது களைப்பற்ற அவ்வரசன் தேவேந்த்ரனால் மிகவும் பஹுமானிக்கப்பட்டான்*

देवानां जयकाङ्क्षी च चकार कदनन्तराम् ।

असुरा निर्जितास्तेन दुर्मदाद्या महाबलाः ॥

தேவர்களின் வெற்றியை விரும்பியவனாக அதற்குப் பிறகு அவனால் தீய எண்ணம் கொண்ட பலம் மிகுந்த அசுரர்கள் வெல்லப்பட்டார்கள்

देवानां च जयः प्राप्तः देवलोकः प्रतिष्ठितः ।

तदा तु प्रीतिदानार्थं किं देयमिति वासवः ॥

विचार्य च तदा प्राह मुचुकुन्दाय देवराट् ।

मुचुकुन्दस्तदा दृष्ट्वा देवं देवेन्द्रपूजितम् ॥

தேவர்களுடைய வெற்றியைக் கொண்டவனாக, தேவலோகத்தில் அமர்ந்த இந்த்ரன் அவனுக்கு அன்பளிப்பாக என்ன கொடுக்கலாம் என்று சிந்தித்து பிறகு முசுகுந்தனிடம் தேவர்க்கரசன் சொன்னான். முசுகுந்தன் அப்போது தேவேந்த்ரனால் பூஜிக்கப்பட்ட இறைவனைப் பார்த்து

वरयामास दास्यध्वं यदि मे दातुमिच्छथ ।

देवो दानं च कृत्वाथ प्रेषयामास तं नृपम् ॥

"இதைக் கொடுக்க விரும்பினால் கொடுக்கலாம்" என்று கேட்கலானான். இந்த்ரன் அதற்குப் பிறகு தானம் செய்து அவ்வரசனை அனுப்பினான்

तद्वाक्यं च समाकर्ण्य विश्वस्य वचनं तदा ।

आप्तवान् च देशं च कालाकाङ्क्षी नृपोत्तमः ॥

அந்த வாக்யத்தைக் கேட்டு நேரத்தை வீணடிக்காமல் அப்போது தன் தேசத்தை வந்தடைந்தான் அந்த சிறந்த அரசன்

अन्यं कृत्वा देवरूपं देवेन्द्रस्तमचांदयत् ।

स्वावाहूतहस्ते दत्वैतत् तद्दृष्ट्वा नृपतिः परम् ॥

इदं न भवतीत्युक्त्वा मुचुकुन्दो व्यसर्जयत् ।

आदितो निर्मितो यस्माद्देवश्चातिविटङ्कः ॥

(அதே) இறைவனின் வடிவில் வேறு உருவங்கள் செய்து தேவேந்த்ரன் அவனை ஏமாற்றினான். தன்னைக் கூப்பிட்டு தன் கையில் கொடுத்ததைப் பார்த்து அவ்வரசன் இது நடவாது என்று ஒதுக்கி விட்டான். முன்பு நிர்மாணம் செய்யப்பட்ட தெய்வமான முதல் விடங்கர்

स्थापितो देवदूतेन काळागरुवनाह्वये ।

अन्यं दत्त्वा उदारं च निर्माय च स वासवः ॥

भूपाय प्रेषयामास एवमाह च तां प्रति ।

ततो विचार्य पश्चात्तु स्वयं निर्माय देवराट् ॥

தேவ தூதர்களால் காளாகருவனத்தில் ஸ்தாபிக்கப்பட்டு மற்ற உருவங்களையும் தாராள மனத்துடன் நிர்மாணம் செய்து இந்த்ரன் அரசனுக்காக அனுப்பி அவனிடம் சொல்லி தானே நிர்மாணமும் செய்து

கொடுத்தான்.

पुनर्जगाम स्वर्गं  च तं दृष्ट्वा वासवोऽपि च ।

आत्मनो देवपूजां च त्यागराज समाह्वयम्  ॥

அவரைக் கண்டு தன் மனதில் அந்த த்யாகராஜன் என்று அழைக்கப்பட்ட அந்த  இறைவனின் வழிபாடும் இருத்திக் கொண்டு பின் இந்த்ரனும் ஸ்வர்க்கம் சென்றடைந்தான்.

अयमेव त्यागराजः तेन प्रोक्तो महेश्वरः ।

तमानीय च लोकांश्च स्वद्भाभक्तिपुरःसरम् ॥

वल्मीकेऽस्थापयत्पश्चात्सन्तोषं परमाप्तवान् ।

तत्रैव पूजाकृत्यानि स्वयमेव तथाऽकरोत् ॥

நான் தான் அவனால் சொல்லப்பட்ட த்யாகராஜன் என்ற மஹேஶ்வரன். அவனை எடுத்து உலகத்தோர் பக்தி செய்வதற்காக கரையான்  புற்றில் ஸ்தாபித்து அதன்பிறகு பரமபதம் அடைந்தான். அங்கேயே பூஜைகள் செய்ய வேண்டியவைகளைத் தானே செய்தான்.

एतदन्यानि पञ्चासन् विटङ्काख्यानि तानि च ।

अन्येषु स्थानवर्येषु वर्तन्तेऽद्यापि  सुज्वलम् ॥

மற்ற ஐந்து விடங்கர் என்ற பெயர் உள்ளவைகள் மற்ற ஒளி பொருந்திய  உயர்ந்த இடங்களில் உள்ளன.

एतदागमनं तस्य विटङ्कस्य महेशतुः ।

कथितं भवता प्रोक्तं सर्वे  श्रृण्वन्तु सादरम् ॥

இது அந்த விடங்கருடைய வருகை. உங்களால் சொல்லப்பட்டது.
எல்லோரும் பக்தியுடன் கேளுங்கள்.

सङ्ग्रहेण मयाख्यातं सर्वलोकोपकारकम् ।

विटङ्कानां च षट्कं च भूतले च प्रतिष्ठितम् ॥

விடங்கர்கள் அறுவர் உலகில் ப்ரதிஷ்டை செய்யப்பட்டது
அனைத்துலகிற்கும் நன்மை பயக்கக் கூடியது - இது சுருக்கமாக
என்னால் சொல்லப்பட்டது.

तेषां दर्शनमात्रेण स्वर्गं विन्दति मानवः ।

एवमन्यानि बहुशः सन्ति वै कारणानि च ॥

அவர்களைக் காண்பதாலேயே மனிதன் ஸ்வர்க்கத்தை  அடைகிறான்.
இது தவிரவும் பிற பல வழிகள் உண்டு.

श्रवणादेव जन्तूनां भोगमोक्षफलप्रदम् ।

अस्य क्षेत्रस्य माहात्म्यं कस्यापि न च विद्यते ॥

கேட்பதால் மட்டுமே உயிர்களுக்கு போகமும் மோக்ஷமும்
கொடுக்கும். இந்த க்ஷேத்ரத்துடைய பெருமை வேறெங்கும்

கிடைப்பதில்லை

महाभिषेककरणैर्महानैवेद्यवन्दनैः ।

प्रदक्षिणनमस्कारैस्स्तोत्रपाठैर्विशेषतः ॥

ये  च पूजां कुर्वन्ति कालागरुवनेशतुः ।

तेऽपि सर्वे शिवेनैक्यं लभन्ते मानवोत्तमाः ॥

பெரிய அபிஷேகம் செய்வதாலும் பெரும் நைவேத்யம் வந்தனம் செய்வதாலும், ப்ரதக்ஷிண நமஸ்காரத்தாலும் ஸ்தோத்ரம் படிப்பதால் குறிப்பாக எவர் இந்த காளாகருவனத்தில் பூஜை செய்கின்றனரோ மனிதர்களில் சிறந்தவர்களான அவர்கள் அனைவரும் ஶிவனுடன் ஒன்றாகும் பதவியை அடைகின்றனர்.

तत्रत्यतीर्थवर्येषु सर्वपापहरेषु च ।

ये स्नान्ति मानवी लोके काले काले च पावने ॥

ते यान्ति शाश्वतं धाम यत्र गत्वा न शोचति ॥

அங்கேயுள்ள எல்லா பாவங்களையும் போக்கும் சிறந்த தீர்த்தத்தில் எவர் பூலோகத்தில் புண்ய காலங்கள் தோறும் ஸ்நானம் செய்கிறார்களோ அவர்கள் எவ்விடத்தில் கவலைகள் இல்லையோ அத்தகைய நிரந்தரமான (முக்தியை) இடத்தை அடைவார்கள்.

निमिषं निमिषार्धं वा दिनार्धमथवा दिनम् ।

ये वसन्ति नरास्यतत्र ते वे कैलासवासिनः ॥

நிமிஷமோ அரை நிமிஷமோ அல்லது அரை நாளோ ஒரு நாளோ இங்கே யார் வாசிக்கிறார்களோ அவர்கள் கைலாஸவாசிகள் ஆகி விடுகின்றனர்.

कन्यादानं च गोदानं वृषोत्सर्जनमेव च ।

वस्त्रं हिरण्यं पयसा सहितं कुम्भमेव च ॥

यो ददाति नरो भक्त्या स याति शिवतुल्यताम् ।

अन्यत्र कोटिदानेन यत्फलं जायते भुवि ॥

तत्फलं ब्रह्मतीर्थस्य तटे च क्षणमात्रतः ।

भविष्यति न सन्देहः सत्यं सत्यं न संशयः ॥

கன்யாதானம் மற்றும் கோ தானம் அல்லது காளை மாடுகளைக் கொடுத்தல், உடை, தங்கம், பாலுடன் குடம் முதலியன எந்த மனிதன் பக்தியுடன் கொடுக்கிறார்களோ அவர்கள் ஶிவஸாம்யத்தை அடைகிறார்கள். மற்ற கோடி தானங்களால் பூமியில் எவ்வித பலன் கிடைக்கிறதோ அந்த பலன் ப்ரஹ்மதீர்த்தத்தின் கரையில் உடனுக்குடன் கிடைக்கிறது இது உண்மை ஸந்தேஹம் இல்லாமல் உண்மை.

पितृप्रीतिकरं श्राद्धं कालागरुवनान्तरे ।

ये कुर्वन्ति नरा भूमौ पितरो यान्ति शाश्वतम् ॥

பித்ருக்களுக்கு ஸந்தோஷம் அளிக்கக் கூடிய ஶ்ராத்தம் பூமியில் காளாகருவனத்தில் எந்த மனிதர்கள் செய்கிறார்களோ அவர்களின் பித்ருக்கள் நிரந்தர பதவியை அடைகின்றனர்

उद्यानस्य प्रकर्तारः ये व पानीयदापकाः ।

वस्त्रगन्धप्रदातारः छत्रध्वजपताकदाः ॥

साम्राज्यभाग्यं लब्ध्वाऽन्ते शिवे लीयन्त तत्र च।

शिवरात्रिव्रतं कृत्वा सोमवारव्रतं तथा ।

भानुवारव्रतं चाऽपि तथा मासो उपवासिनम् ॥

एकैकं कोटिगुणितं फलं भवति निश्चितम् ।

देवस्येशानदिग्भागे यश्च कूपः प्रवर्तते ॥

बिलं शेषबिलं नाम शेषेण च कृतं पुरा ॥

*பூந்தோட்டங்கள் வைப்பவர், (தண்ணீர் போன்ற) அருந்தக் கூடிய வற்றைக் கொடுப்பவர்கள், உடை வாசனைத்ரவியங்கள் போன்றவற்றைக் கொடுப்பவர்கள், குடை கொடி கொடிக்கம்பம் போன்றவற்றை தானமாகக் கொடுப்பவர்கள் ஸாம்ராஜ்யத்தை அடைந்து பிறகு ஶிவனுடன் ஒன்றாகி விடுவார்கள். ஶிவராத்ரி வ்ரதமும் திங்கட் கிழமையில் செய்யும் ஸோமவார வ்ரதமும், ஞாயிறன்று பானுவார வ்ரதமும் மாதந்தோறும் உபவாஸமும் இருப்பவர்களுக்கு ஒவ்வொன்றிற்கும் கோடிக்கணக்கில் நிச்சயமாகப் பலன் உண்டு. இறைவனின் வடகிழக்கு மூலையில் எங்கே கிணறு உள்ளதோ அங்கே உள்ள த்வாரம் ஶேஷபிலம் என்று ஆதிஶேஷனால் முன்பு செய்யப்பட்டது*

विलद्वारेण चागत्य प्रत्यहं परिपश्यति ।

रसानि च ददन्नित्यं शिवभक्त्या विशेषतः ॥

*இந்த பிலத்வாரத்தின் மூலம் வந்து எல்லாவற்றையும் பார்க்கிறார். ஶிவபக்தியினால் ரசங்களை எப்போதும் அளிக்கிறார்*

तत्कूपदर्शनं लोके दुर्लभं मनुजेषु वै ।

तत्तीर्थपानमात्रेण कुष्ठरोगी विमुच्यते ॥

*அந்த கிணற்றின் தரிசனம் மனிதர்களுக்கு கிடைத்தற்கரியது. அந்த தீர்த்தத்தைக் குடித்தவுடன் குஷ்டரோகி குணமடைவான்*

तत्तीरे पिष्टदानं च सघृतं च फलान्वितम् ।

शिवप्रीतिकरं  नित्यं शिवलोकप्रदायकम् ॥

*அந்த தீரத்தில் பழங்களுடனும்நெய்யுடனும் மாவு தானமாகக் கொடுத்தல் ஶிவனுக்கு மிகவும் மகிழ்ச்சி அளிக்கும் ஶிவலோகத்தைக் கொடுக்கும்.*

तेनैव सहितं यस्तु कुरुते च प्रदक्षिणम् ।

तेन भूः सकला दत्ता फलसस्यसमन्विता  ॥

*அத்துடன் யார் ப்ரதக்ஷிணம் செய்கிறார்களோ அவரால்  பழமும் பயிரும் நிறைந்த பூமி அனைத்தும் கொடுக்கப்பட்டதாகி விடும்.*

तत्तदर्शनादेव यमलोकं न पश्यति ।

प्रातर्दृष्ट्वा च तत्कूपं रात्रिपापाद्विमुच्यते ॥

*அதன் தரிசனத்தாலேயே யமலோகத்தைப் பார்ப்பதில்லை. காலையில் அந்த கிணற்றைக் கண்டால் முந்தைய இரவு செய்த பாவங்களிலிருந்து விடுவிக்கப்படுவான்.*

सायं दृष्ट्वा दिवापापं तत्क्षणेन विमुच्यते ।

प्रतिमासं सङ्क्रमेषु अमायां पौर्णिमासु च ॥

सोमवारेषु सर्वेषु विशेषात्कार्तिकेषु च ।

प्रदक्षिणत्रयं कृत्वा नत्वा पीत्वा च तज्जलम् ॥

ब्रह्महत्यादिपापैश्च मुच्यते तत्क्षणेन च ।

लिङ्गस्य मूलपर्यन्तं तत्कूपं च प्रवर्तते ॥

शिवस्य बन्धिनी यस्मात्तस्मात्तसदृशं न हि ।

*(அதை) மாலையில் பார்த்தால் காலையில் செய்த பாவத்திலிருந்து அந்த க்ஷணமே விடுவிக்கப்படுவான். ஒவ்வொரு மாதமும் ஸங்க்ரமண காலத்திலும் அமாவாசையிலும் பௌர்ணமியிலும் கூட எல்லா திங்கட்கிழமைகளிலும் முக்யமாக கார்த்திகை மாதத்தில் மூன்று ப்ரதக்ஷிணம் செய்து நமஸ்கரித்து அதன் நீரை அருந்தி ப்ரஹ்மஹத்யை முதலிய பாபங்களினின்று அந்த நொடியே விடுபடுவான். லிங்கத்துடைய அடிபாகம் வரை எந்த கிணறு செல்கிறதோ ஶிவனுடைய கட்டுப்பாடு எதிலிருந்து வருகிறதோ அதற்கு இணை இல்லை.*

यानीह पुण्यानि शिवप्रियाणि

कृतानि नान्येव च तत्र भूमौ ।

क्षणं क्षणार्धं निमिषं तदर्थं

वासं च कृत्वा सुखमेति तीर्थे ॥

*ஶிவனுக்கு ப்ரியமானவையான எந்த புண்யங்கள் பூமியில் செய்யப்பட்டனவோ நொடியோ அரைநொடியோ நிமிஷமோ அதற்காக இங்கே வாஸம் செய்து சுகமடைவார்கள்*

तस्मात्तत्कूपतीर्थे च पश्येन्नित्यमतन्द्रितः ।

सर्वसौभाग्यसंपत्तिर्भविष्यति शिवाश्रयात् ॥

*அதனால் கூப தீர்த்தத்தில் தினமும் சோம்பல் இல்லாமல் தர்சனம் செய்ய வேண்டும். அதனால் ஶிவனருளால் எல்லா ஸௌபாக்யங்களும் கிட்டும்.*

॥ इति श्रीशैवपुराणे एकादशरुद्संहितायां उपरिभागे क्षेत्रखण्डे काळागरुवनमाहात्म्ये

तीर्थावरणं नाम पञ्चपञ्चाशोऽध्यायः ॥

*ஶ்ரீஶிவபுராணத்தில் ஏகாதசருத்ர ஸம்ஹிதையில் உபரிபாகத்தில் க்ஷேத்ரகண்டத்தில் காளாகருவன மாஹாத்ம்யத்தில் தீர்த்தாவரணம் என்ற பெயர் கொண்ட ஐநூற்றி ஐந்தாம் அத்யாயயம்*

## 10.पाद्मेपुराणे मन्त्रसिद्धिक्षेत्रकल्पे

*பத்மபுராணத்தில் மந்த்ரஸித்திக்ஷேத்ர கல்பத்தில்*

सूतः

इत्थं लक्ष्मीस्तपस्तेपे विष्ण्वर्थं मुनिसत्तमाः ।

तस्मात्क्षेत्रवरं पुण्यं तन्नाम्ना प्रार्थितं भुवि ॥

*ஸூதர் சொல்கிறார்:*

*ஓ முனிவர்களே! இவ்வாறு லக்ஷ்மீ விஷ்ணுவை அடைவதற்காக தவம் செய்தாள். அதனால் இந்த சிறந்த க்ஷேத்திரம் அவள் பெயரால் விளங்கிற்று.*

लक्ष्म्याः घटस्तनपयोवर्धितं विपिनं यतः ।

तस्माल्लक्ष्मीवनं नाम्ना विख्यातं तज्जगत्रये ॥

*லக்ஷ்மியால் பால் பொழியப்பட்டு வளர்ந்த காடானதால் லக்ஷ்மீவனம் என்ற பெயருடன் மூவுலகிலும் அறியப்பட்டது.*

कमलार्थं बृहद्वीचिः बहिर्भूतोऽम्बुदध्वनिः ।

ततो बहिर्बृहत्सिन्धुनाथः संज्ञातविश्रुतः ॥

*அவளுக்காக கடல் நீரின் பேரரவத்துடன் வெளியில் பெரிய குளம் ஏற்பட்டது. அதனால் பஹிப்ருஹத்ஸிந்துநாதர்"(திருப் பெரும்புறக்கடல்) என்ற  பெயருடன் விளங்கிற்று.*

विवाह मङ्गळं ह्यत्र पुरे श्रीकृष्णयोरभूत् ।

श्रीकृष्णमङ्गलं नाम तस्मादस्य पुरस्य वै ॥

மங்களகரமான விவாஹம் ஸ்ரீக்ருஷ்ணனுடன் நடந்தது. அதனால் ஸ்ரீக்ருஷ்ணமங்கலம் என்று நகரத்துடைய பெயர் ஆனது.

नियतं मङ्गलकरं कृष्णस्यापि महत्पुरम् ।

ततस्तु प्रथितं लोके कृष्णमङ्गलमित्यपि ॥

மிகவும் மங்களகரமான க்ருஷ்ணனுடைய பெருநகரமாய் அது விளங்கியது உலகில் க்ருஷ்ணமங்களம் என்று வழங்கலாயிற்று.

इन्द्रोऽपि यां समाराध्य वसन्तीं कमलालये ।

लब्धवान्पारमैश्वर्यं देवराज्यं च शाश्वतम् ॥

सा पुण्या कमला देवी पुष्करैर्नियमैर्व्रतैः ।

एवं लब्धवती देवं भक्तजीवं पतिं द्विजाः ॥

இந்த்ரனும் கமலாலயத்தில் யாரை வழிபாட்டு பெரும் செல்வத்தையும் தேவராஜ்யத்தையும் பெரும்பதவியையும் அடைந்தானோ அந்த சிறப்பு மிக்க கமலாதேவி இந்த புஷ்காரத்தில் நியமத்துடன் வ்ரதத்தினால் இவ்வாறு பக்தியுடன் பதியை அடைந்தாளோ ஓ ப்ராஹ்மணர்களே!

ऋषयः

अस्माकमन्तरा कश्चित्सन्देहः सूत संभव ।

कुरुष्व तस्य विच्छेदं श्रेयोऽस्माकं त्वमेव हि ॥

*ரிஷிகள்*

*ஒ ஸூதரே! எங்களுக்குள் சிலஸந்தேஹங்கள் ஏற்பட்டன அவற்றை நிவர்த்தி செய்து எமக்கு நன்மை செய்வீராக!*

कमला पूजितेन्द्रण गृहेऽर्चा च विशेषतः ।

तपश्चचार सा देवी वसन्ती कमलालये ॥

*லக்ஷ்மீ இந்த்ரனால் விஶேஷமாக வீட்டில் பூஜிக்கப்பட்டாள். அந்த தேவி கமலாலயத்தில் வசித்து தவம் செய்தாள்*

कमलालयतस्तस्यां कमलायां पुनर्हरिम् ।

भक्तजीवं पतिं लब्ध्वा प्राप्तायां कृष्णमङ्गळम् ।

*கமலாலயத்திலிருந்து மீண்டும் அவள் தாமரை மலருக்குள் மீண்டும் விஷ்ணுவை அடைந்து பக்தியுள்ள வாழ்வையும் பதியையும் க்ருஷ்ணமங்கலத்தை அடைந்தாள்*

किञ्चकार स देवेन्द्रः तत्र वास्य तु पूजकः ।।

कथं वा पारमैश्वर्यं लब्धवान्देवनायकः ॥

*என்ன பூஜை செய்தான் இங்கே வசித்த அந்த தேவேந்த்ரன்? எப்படி அந்த தேவர் தலைவன் பெரும் செல்வத்தை அடைந்தான்*

सूतः

पुनः पुरन्दरो देवः सार्धं सर्वैः सुरेश्वरैः ।

दर्शपुष्करणीतीरे प्रवासं समकल्पयत् ॥

*ஸூதர்:*

*மீண்டும் இந்த்ரன் எல்லா தேவர்களுடனும் தேவர் தலைவர்களுடனும் தர்ஶபுஷ்கரிணீ தீரத்தில் தங்கி இருந்தான்.*

प्राचीं विष्णुपदीं वेलां पालयेद्यत्प्रसादतः।

पुनस्तत्र पुरे रेमे कमलां स तु पूजयन् ॥

*முன்பு கங்கையில் இருந்த போது அவர் அருளைப்பெற மீண்டும் அந்த நகரத்தில் வந்தடைந்து லக்ஷ்மியை அவன் வழிபட்டு*

कुर्वन्तत्र कुटुम्बित्वं कमलापूजनापरः ।

आनिनाय स चेन्द्राणीं स्वर्गतः सुरवन्दिताम् ॥

*அங்கே தேவர்களால் வணங்கப்படும் இந்த்ராணியையும் அழைத்து வந்து குடும்பத்துடன் வாஸம் செய்து லக்ஷ்மியை வழிபட்டான்.*

ततो गृहार्चनं बिम्बं अम्बिकावल्लभं शिवम् ।

आनिनायामरावत्यां सहवीथी विटङ्कम् ॥

*அப்போது அமராவதியில் தன வீட்டில் பூஜை செய்யும் அம்பிகையின் தலைவனான ஶிவனின் வடிவமான வீதீவிடங்கரையும் கொண்டு வந்தான்*

विटङ्का विविधाकाराः राजन्ते यस्य वीथिषु ।

गृहार्चदेव तत्वेन्द्रख्यातं वीथिविटङ्ककम् ॥

விடங்கர்கள் வெவ்வேறு உருவத்தில் யாருடைய வீதியில் மிளிர்கிறார்களோ, அந்த தேவேந்திரன் வீட்டில் வழிபட்டதால் வீதிவிடங்கர் என்று அழைக்கப்பட்டவர்

टङ्कं शिल्पायुधं ज्ञेयं वीथ्यां यस्यां न तत्कृतम् ।

त्वष्ट्रा मानससृष्टं स्यात्तद्वा वीथीविटङ्ककम् ॥

உளி(டங்கம்) என்ற சில்பம் செய்யப்படும் ஆயுதம் என்று வழங்கப்படும். அவ்வாயுதத்தால் எது வீதியில் செய்யப்படாது த்வஷ்டாவால் மனத்தால் ஸ்ருஷ்டி செய்யப்பட்டதாலோ வீதிவிடங்கர்

धाम्ना सहैव नित्यार्चामवतार्य दिवो हरिः ।

प्रतिष्टाप्य पुरे लक्ष्मीं पूजयामास नित्यशः ॥

தன் இருப்பிடத்துடன் அர்ச்ச ரூபமாக மேலுலக த்தினின்று ஹரியானவர் லக்ஷ்மியை இங்கே ஸ்தாபித்து இவ்விடத்திலுள்ள (இறைவனை) எப்போதும் பூஜிக்கலானார்.

सङ्ग्रहार्चा हि पूजार्थं नदीं मन्दाहिनीमपि ।

आनीनाय सरोरूपां क्षेत्रेऽत्र कमलालये ॥

சேர்ந்து பூஜைக்காக மந்தாகினி நதியையும் ஒரு குளத்தின் வடிவமாக

இங்கே கமலாலயத்தில் கொண்டு வந்தார்.

देवानां तीर्थ एवेह देवतीर्थप्रथां यतः ।

कमलां च तपस्यन्तीं ग्रहार्चामपि पूजयन्

चक्रे शक्रः कुटुम्बित्वं नियतं कमलालये ॥

தேவர்களின் தீர்த்தம் அதனால் இங்கே தேவதீர்த்தம் என்று வழங்கலாயிற்று. தவம் செய்த லக்ஷ்மியும் க்ரஹங்களும் அர்ச்ச ரூபத்தை பூஜித்த கமலாலயத்தில் இந்த்ரன் குடும்பத்துடன் வாசம் செய்தான்

ततेन्द्रेणार्चितः शम्भुः अष्टैश्वर्यं ददौ यतः ।

ततः आरभ्य लोकेषु त्यागराजः प्रथामगात् ॥

அதன் பிறகு இந்த்ரனால் அர்ச்சிக்கப்பட்ட ஶிவன் எட்டு வித ஐஶ்வர்யங்களையும் அளித்தார். அன்று முதல் உலகங்களில் த்யாகராஜர் என்று வழங்கப்பட்டார்.

ततश्च कमल प्रीता स्वभक्तस्य सुरेशितुः ।

ददौ यत्पारमैश्वर्यं विख्याता सेन्दिरेति सा ॥

அதன் பிறகு மகிழ்ந்த லட்சுமி தன் பக்தனான இந்த்ரனுக்கு ஸகல ஐஶ்வர்யங்களையும் தந்து இந்திரா என்று வழங்கப்பெறலானாள்

तत्काले कमला देवी स्वपदं तेन विष्णुना ।

आनीता भक्तजीवेन भक्तवात्सल्यशोभिता ॥

அப்போது அந்த லக்ஷ்மீ தேவி விஷ்ணுவால் உடன் பக்தையாக அழைத்து வரப்பட்டு பக்தவத்ஸலத்தில் (க்ஷேத்திரத்தில்) விளங்கினாள்.

प्रत्यग्विष्णुपदीतीरं प्रस्थिता स सखीजना ।

स्वभक्तं  प्रणतं शक्रं प्राह पङ्कजलोचना ॥

கங்கைக் கரையில் தோழிகளுடன் சென்று தன்னை வணங்கும் இந்த்ரனிடம் தாமரைக்கண்ணாள் லக்ஷ்மீ சொன்னாள்

कृतसन्निधिना पश्चाद्दर्शपुष्करणीतटे ।

आनीता वल्लभेनाहं गच्छाम्यद्य सुरेश्वर ॥

“தர்ஶபுஷ்கரிணீ தீரத்தில் ஸாந்நித்யம் செய்து நான் என் தலைவனால் (விஷ்ணுவால் ) அழைத்து  வரப்பட்டேன் அதனால் அங்கே செல்கிறான்  ஓ தேவர் தலைவனே.

दत्तं ते परमैश्वर्यं देवराज्यं च शाश्वतम् ।

भूयः किमन्यदाशास्यं तद्वदस्व वलान्तक ॥

உனக்கு ஸகல ஐஶ்வர்யங்களும் நிலையான பதவியும் தேவராஜ்யமும் தரப்பட்டது. இன்னும் என்ன விருப்பமோ அதைச் சொல்வாய் வலன் என்ற அரக்கனை கொன்றவனே!”

इन्द्रः

नमामि सर्वलोकानां जननीमजसम्भवाम् ।

प्रफुल्लत्पङ्कजाक्षीं त्वां प्रणतापत्प्रहारिणीम् ॥

இந்த்ரன்:
*"அனைத்து லோகங்களுக்கும் அன்னையை ப்ரஹ்மனின் தாயை மலர்ந்த தாமரைக் கண்ணாளை வணங்குவோர் தாபம் தீர்ப்பவளை உன்னை வணங்குகிறேன்.*

त्वत्समाराधनेनाहं कृतार्थो जगदम्बिके ।

पुङ्खानुपुङ्खा अभवन् त्वत्प्रसादाद्विभूतयः ॥

*ஓ ஜகதம்பிகையே! உன் ஆராதனையால் நான் படைபலமும் பெருஞ்செல்வமும் அடைந்தவனானேன்.*

अस्यैव त्यागराजस्य समीपे त्वत्पुरे शुभे ।

नित्यं सन्निहिता पूजां गृहाण ममचेश्वरि ॥

*இந்த த்யாகராஜருக்கு அருகில் உன் மங்களகரமான நகரத்தில் எப்போதும் இருந்து பூஜையையும் ஏற்பாய் ஓ தேவியே!*

नान्यज्जन्म जगन्मातः नितरां देहि मे वरम् ।

इति तस्य वचः श्रुत्वा कमला कमलेक्षणा ॥

ஓ உலகின் அன்னையே ! வேறு ஜன்மா கொடுக்காமல் எப்போதும் வரம் தருவாய்" என்ற அவன் சொற்களைக் கேட்டு தாமரைக் கண்ணாளான கமலை

विभज्य तु कलां काञ्चिद्दत्वा भक्ताय वज्रिणे ।

श्रीकृष्णमङ्गलं गत्वा भक्तजीवेन सङ्गता ॥

தன் கலையைப் பிரித்து வஜ்ராயுத தாரியான இந்த்ரனுக்கு கொடுத்து ஸ்ரீகிருஷ்ணமங்கலம் பக்தியுடன் சென்றாள்

तस्मात्स्वां कमलामिन्द्रस्तत्रैव कमलालये।

स्वगृहार्चनदेवार्चां त्यागराजमपूजयत् ॥

அதனால் லக்ஷ்மியையும் இந்த்ரன் அங்கயே கமலாலயத்தில் தன் வீட்டில் அர்ச்சிக்கும் த்யாகராஜரையும் பூஜித்தான்

॥ इति श्रीपाद्मेपुराणे पञ्चमखण्डे मन्त्रसिद्धिक्षेत्रकल्पे भक्तवत्सलमाहात्म्ये लक्ष्मीविवाहो नाम षष्टितमोऽध्यायः ॥

ஸ்ரீ பாத்மபுராணத்தில் ஐந்தாவது கண்டத்தில் மந்த்ர ஸித்திக்ஷேத்ர கல்பத்தில் பக்தவத்ஸல மாஹாத்ம்யத்தில் லக்ஷ்மீவிவாஹம் என்ற பெயர் கொண்ட அறுபதாம் அத்யாயம் முற்றிற்று

[ராமர் விடங்கநாதரை பரிவாரங்களுடன் வழிபட்டது]

सूतः

तदा विटङ्कनाथः च  पूजनीयो विशेषतः ।

मुचुकुन्दनृपाव्याजादागतो देवलोकतः ॥

*அப்போது விஶேஷமாக பூஜிக்கப்பட வேண்டிய விடங்க நாதர் முசுகுந்தன் என்ற அரசனால் தேவலோகத்திலிருந்து வந்தவர்*

सप्तस्थानेषु भगवान्विटङ्काख्यः प्रकाशते ।

शिवरात्रौ विटङ्केशं अभिषिच्य विशेषतः ।

ये पश्यन्ति चतुर्यामं ते वै  कैलाशवासिनः ॥

*ஏழு ஸ்தானங்களுள் விடங்கன் என்ற பெயர் பெற்ற இறைவன் ப்ரகாசிக்கிறார். ஶிவராத்ரி அன்று விஶேஷமாக விடங்கேஶரை அபிஷேகம் செய்து நான்கு யாம (பூஜையில்) யார் காண்கிறார்களோ கைலாஸவாசிகள் ஆகின்றனர்*

बिल्वपत्रैर्विशेषेण पूजा कार्या महेशितुः ।

कमलालयं  च संप्राप्य नत्वा वल्मीकसम्भवम् ॥

*கமலாலயத்தை அடைந்து புற்றிலிருந்து  தோன்றிய பெருமானை வணங்கி வில்வ இலைகளால் விஶேஷமாக ஶிவனுடைய   பூஜை செய்யப்பட வேண்டியது .*

त्यामराजाख्यदेवं च  अचलेश्वरमेव च।

स्नात्वा च देवतीर्थे तु गत्वा क्षीराख्यकुण्डकम् ॥

*த்யாகராஜர் என்ற பெயருடைய இறைவனையும் அசலேஸ்வரரையும் (வணங்கி) தேவதீர்த்தத்தில் ஸ்நானம் செய்து க்ஷீர குண்டத்திற்குச் சென்று*

**विश्वेशसन्निधौ नत्वा पिण्डं प्रीतिपुरस्सरम् ।**

**ततो प्लक्षं च संप्राप्य कृत्वा पिण्डं च पूर्ववत् ॥**

**स्वां पुरीं प्राप्तवान्पश्चाद्भरतादिभिरन्वितः ॥**

*விஶ்வேசரின் ஸந்நிதியில் வணங்கி பிண்டத்தை அளித்து அதன் பிறகு ப்லக்ஷத்தை அடைந்து அங்கேயும் பிண்டத்தை முன்பு போல அளித்து தன் இடத்தை பரதன் முதலியோர் சூழ வந்தடைந்தான்.*

**इति श्रीशैवपुराणे सीतरामेश्वर माहात्म्ये पञ्चमोध्यायः**

*ஶ்ரீ ஶிவபுராணத்தில் ஸீதா ராமேஸ்வர மாஹாத்ம்யத்தில் ஐந்தாவது அத்யாயம் முற்றிற்று*

**श्रीविष्णुः -**

**महातपस्विन्सनक रहस्यं वद किञ्चन ।**

**कैर्नामभिः शिवः प्रीतः भविष्यत्यर्चितो जपात् ॥**

*ஶ்ரீவிஷ்ணு :*

*மஹாதபஸ்வியான ஸனகரே! ஒரு ரஹஸ்யத்தைக் கூறும்! எந்த பெயர்களால் ஶிவன் அர்ச்சனையாலும் ஜபத்தாலும் மகிழ்கிறான்?*

असङ्ख्यनामानि हरस्य सन्ति

तेष्वेषु सर्व(म्पत)फलदायकानि ।

तानद्य मे ब्रूहि सुतस्य सिद्ध्यै

वन्ध्यात्वदोषपनयाय लक्ष्म्याः ॥

*எண்ணிலடங்கா பெயர்கள் ஶிவனுடையது. அவற்றில் எவை எல்லா பலனையும் அளிக்கக் கூடியவை? அதை நீ இன்று எனக்கு குழந்தை பேறு கிட்டுவதற்காகவும் மலட்டுத்தன்மை என்ற தோஷம் லக்ஷ்மியைச் சேராமல் இருப்பதற்காகவும் சொல்வீர்*

इति सम्प्रार्थितः श्रीमान्विष्णुना सनको मुनिः ।

प्रीतो गद्गदया वाचाप्येवं वचनमब्रवीत् ॥

*இவ்வாறு ஸ்ரீமஹாவிஷ்ணுவால் வேண்டப்பட்ட ஸநக முனிவர் மகிழ்வுடன் தன் வாக்கினால் இதை சொல்லலானார்.*

स्वामिन् जगत्प्रभुस्त्वं हि वक्तुं प्रारभतादरात् ।

सोमास्कन्दो जगन्नाथः कमलापुरनायकः ॥

*ஒ இறைவனே! உலகின் தலைவன் நீர் என்று மரியாதையுடன் ஆரம்பித்து, உமையுடனும் ஸ்கந்தனுடனும் சேர்ந்தவன், உலகின் தலைவன், கமலாபுரத்தின் தலைவன்*

कल्याणवेषः कारुण्यमूर्तिः कनकपुष्कलः ।

कल्हारमालाकलितो रत्नसिंहासनाधिपः ॥

மங்களம் பொருந்திய வடிவம் கொண்டவர்; கருணை வடிவானவர் ; பொன்னார்மேனியன்; செங்கழுநீர் மாலை அணிந்தோன்; ரத்னஸிம்ஹஸனத்தில் அமர்ந்தோன்

राजराजप्रियो राज्यदायी राजशिखामणिः ।

रमो रत्नप्रियो रक्षाचतुरो नटनायकः ॥

பேரரசர்களுக்கு பிரியமானவர்; அரசப்பதவி அளிப்பவர்; அரசர்களின் சிகாமணி; இன்பவடிவானவர்; ரத்னங்களை விரும்புவோர்; காத்தலில் நிபுணர்; நடனம் செய்வோர் தலைவர்;

अजपानटनः शम्भुर्वीरखड्गविलासवान् ।

ताटङ्कसुन्दरः सौम्यः सर्वसौभाग्यवर्धनः ॥

அஜபா நடனம் செய்பவர்; நன்மை செய்பவர்; வீரகட்கம் தரித்த பெருமைஉடையோன்; அழகிய தாடங்கம் அணிந்தோன்; சாந்தஸ்வரூபி / ஸோமம் உடையோன்; எல்லா ஸௌபாக்யமும் தழைக்கச் செய்பவர்.

सान्द्रकर्पूरधवलः कृष्णगन्धानुलेपनः ।

वल्मीकमूलनिलयः पराशक्तिपरिग्रहः ॥

கற்பூரத்தைப் போன்று வெண்மையானவர்; க்ருஷ்ணகந்தம் தரித்தவர் வல்மீகம் என்னும் மூலாதார க்ஷேத்ரத்தில் உள்ளோன்;

பராசக்தியால் கவரப்பட்டவர்

देवतीर्थप्रियो  देवो हाटकक्षेत्रलक्षितः ।

दिव्यैर्दैवार्चितो देवसिद्धगन्धर्वसेवितः ॥

தேவதீர்த்தத்தில் விருப்பம் உள்ளவர்; இறைவன் ஹாடகக்ஷேத்ரம் என்று வழங்கப்படுமிடத்தில் வசிப்பவர்; புனிதமான தேவர்களால் அர்ச்சிக்கப்பட்டவர்; தேவர்கள் சித்தர்கள் கந்தர்வர்களால் வணங்கப் படுபவர்

आनन्दरूपोप्यानन्ददायियि सर्वनिषेवितः ।

वेदान्तविमलो विद्यापारगः पार्वतीपतिः ॥

ஆனந்தஸ்வரூபி; ஆனந்தம் அளிப்பவர்; எல்லாவற்றிலும் உறைபவர்; வேதாந்தம் கூறும் சுத்த தத்வம்; அறிவுக்கப்பாற்பட்டவர்; பார்வதியின் தலைவன்

गुहतातो गुरुश्रेष्ठः गुणवान्गुणवर्जितः ।

सत्यज्ञानमयो नित्यः निर्मलो  निरहंकृति ॥

முருகனின் தந்தை; குருவில் சிறந்தவர்; குணம் பொருந்தியவர்; குணங்கள் அற்றவர்; ஸத்ய ஞான மயமான ப்ரஹ்மஸ்வரூபம்; நித்யர்; சுத்தர்; தான் என்ற அஹங்காரம் அற்றவர்

शान्तः सर्वगतः शम्भुः शत्रुसंहारलम्पटः ।

कळङ्करहितः काम्यः कन्बुकण्ठः कलाधरः ॥

சாந்தஸ்வரூபி; அனைத்திலும் உறைபவர்; நன்மை பயப்பவர்; எதிரிகளைக் கொல்வதில் ஸமர்த்தர். குறையற்றவர்; பலன்அளிப்பவர்; சங்கு போன்ற அழகிய கழுத்தை உடையவர்; பிறையைத் தரிப்பவர்

कृतज्ञो नीतिशास्त्रज्ञो निराकारो महाप्रभुः ।

सदानन्दो सदाध्येयो त्रिनेत्रस्त्रिजगद्गुरुः ॥

நன்றியுடையவர்; நீதி சாஸ்த்ரம் அறிந்தவர்; உருவமற்றவர்; பெரும் தலைவர்; எப்போதும் ஆனந்தம் நிறைந்தவர்; முக்கண் உடையவர்; மூவுலகுக்கும் குரு

शूलपाणिः शुभकरः शुद्धः सुन्दरपूजितः ।

दृप्तः तरुणरूपश्च कमलायतलोचनः ॥

சூலமேந்தியவர்; நற்பலன் தருபவர்; சுத்தர்; ஸுந்தரமூர்த்தி நாயனாரால் பூஜிக்கப்பட்டவர்; காட்டிலுறைபவர்; இளமை நிரம்பியவர்; தாமரைக்கண்ணர்

वीथीविटङ्को विशादः विपुलांसो विशारदः ।

विश्वार्थदो विरूपाक्षः विश्वगोप्ता विभावसुः ॥

வீதிவிடங்கர்; ஒளி மிக்கவர் ; பரந்து விரிந்தவர் ; கற்றறிந்தவர்; உலகின் விழைவுகளை பூர்த்தி செய்பவர்; வேறுபட்ட கண்ணை உடையவர்;  உலகை மறைப்பவர்; மிகுந்த ஒளி பொருந்தியவர்

सदाध्येयः सदापूज्यः सदास्तोतव्य ईश्वरः ।

ईशानो जगदीशानो जन्मभूश्च विनायकः ॥

*எப்போதும் த்யானம் செய்யத் தக்கவர்; எப்போதும் பூஜிக்கத் தக்கவர்; எப்போதும் நினைக்கத் தக்கவர்; எல்லாவற்றுக்கும் தலைவர்; ஈஶானர்; உலகின் தலைவர்; பிறப்பிடம் ; தனக்குத் தலைவர் அற்றவர்.*

कालान्तकः कामहरः त्रिपुरारिस्त्रिलोचनः ।

मखध्वंसी महायोगी मत्तगर्वनिवारकः ॥

*காலனை வென்றவர்; காமனை வென்றவர்; முப்புரம் அழித்தவர்; முக்கண்ணர்; யாகத்தை (தக்ஷன்) அழித்தவர்; பெரும் யோகி; ஆணவத்தை நீக்குபவர்.*

ज्ञानदायी मोक्षदायी दुष्टदूरो दिवाकरः ।

पूषमूर्तिरनन्तात्मा प्रभामण्डलमध्यगः ॥

*ஞானம் அளிப்பவர்; மோக்ஷம் அளிப்பவர்; தீயவரை ஒழிப்பவர்; ஞாயிறும் ஆனவர்; போஷிக்கும் வடிவைக் கொண்டவர்; முடிவற்ற தன்மையவர்; ஒளி வட்டத்தின் நடுவில் இருப்பவர்*

मन्दस्मितमुखो मान्यः मङ्गळाङ्गो महातनुः ।

पीताम्बरधरः सूक्ष्मः सत्यसन्धः सनातनः ॥

*புன்சிரிப்பு உடையவர்; மதிப்பு மிக்கவர்; மங்களவடிவானவர்; பெரும்*

*சரீரம் உடையவர்; மஞ்சள் நிற பட்டாடை அணிபவர்; ஸூக்ஷ்மமானவர். ஸத்யத்தில் உறைபவர். என்றும் இருப்பவர்*

**त्यागराजो महाराजो  विष्णुवन्द्यो विराण्मयः ।**

**एवं अष्टोत्तरशतं सोमास्कन्दस्य च प्रभोः ॥**

**नाम्नामुक्तमिदं पुण्यं सद्यः सर्वार्थसिद्धिदम् ।।**

*த்யாகராஜர்; பேரரசர்; விஷ்ணுவால் பூஜிக்கப்பட்டவர்; விராட்புருஷனின் உருவானவர்; இவ்வாறு ஸோமாஸ்கந்த பிரபுவின் இங்கே சொல்லப்பட்ட நூற்றெட்டு புண்ய நாமங்கள் உடனே எல்லாவற்றையும் தரவல்லது*

**॥ इति श्रीपाद्मे पुणे पञ्चमखण्डे मन्त्रसिद्धक्षेत्रकल्पे सप्तषष्टितमोऽध्यायः ॥**

*ஸ்ரீபத்ம புராணத்த்தில் ஐந்தாவது கண்டத்தில் மந்த்ர ஸித்தி க்ஷேத்ரகல்பத்தில் அறுபத்தேழாம் அத்யாயம் முற்றிற்று*

*Colophon* : **इति परमहंसपरिव्राजकाचार्य अभिनवनारायणेन्द्र सरस्वती पूज्यपादशिष्य**

**श्रीमत्परमशिवेन्द्रसरस्वतीविरचितं**

*பரமஹம்ஸ பரிவ்ராஜக ஆசார்ய அபிநவநாராயணேந்த்ர ஸரஸ்வதி பூஜ்யபாதரின் சிஷ்யரான[2] ஸ்ரீமத்பரமஶிவேந்த்ர ஸரஸ்வதியால் எழுதப்பட்டது*

---

[2] *இவர் பரமஶிவேந்த்ரரின் வித்யா குரு (பார்க்க - டா.வே. ராகவன் முன்னுரை ஸதாஶிவ ப்ரஹ்மேந்திராள் விஜயம் )*

। दशपुराणसङ्ग्रहः सम्पूर्णः । தசபுராண ஸங்க்ரஹம் முற்றிற்று

। मुक्तद्वरविनायकाय नमः । நதிக்கரை விநாயகருக்கு நமஸ்காரம்

। त्यागराजाय नमः । த்யாகராஜருக்கு நமஸ்காரம்